மலர் 14 இதழ் 297

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190, 76199

"நவமணி"

சந்தா விபரம்

தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் மற்றும் ஏஜண்டு மூலம் | தபால் மூலமாக |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 6-00 | ரூ. 6-60 |
| 3 மாதம் | ரூ. 18-00 | ரூ. 20-00 |
| 6 மாதம் | ரூ. 36-00 | ரூ. 40-00 |
| 1 வருடம் | ரூ. 72-00 | ரூ. 80-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 12-7-74 வெள்ளி

வெளியூர் 13-7-74 சனி



## எம். ஜி. ஆர். படம் நிறுத்தம்:

# கல் வீச்சு: போலீஸ் கண்ணீர் புகை

## சென்னையில் பதட்ட நிலை

காஞ்சிபுரம், ஜூலை 12—காஞ்சிபுரத்தில் எம்.ஜி.ஆர். படம் நிறுத்தப்பட்டதைத் தொடர்ந்து தியேட்டர் மீது கல் வீச்சு நடைபெற்றது.

வன்முறையாளர்களைக் கலைக்க போலீசார் கண்ணீர் புகைப் பிரயோகம் நடத்தினர்.

காஞ்சிபுரத்தில் லட்சுமி தியேட்டரில் எம். ஜி. ஆர். நடித்த 'நேற்று இன்று நாளை' படம் திரையிடப்படுவதாக இருந்தது. ஏதோ ஒப்பந்தத் தகராறு காரணமாக தியேட்டர்காரர்கள் அந்தப் படத்தைத் திரையிடவில்லை என்று தெரிகிறது.

இதனால் ஆத்திரமடைந்த எம். ஜி. ஆர். ரசிகர்கள் இன்று காலை காஞ்சிபுரத்தில் பெரும் கலாட்டா செய்துள்ளனர். போகும், வரும் பஸ்கள் மீது சரமாரியாக கற்களை வீசினர். இதனால் ஒரு பஸ் பலத்த சேதமடைந்தது. பஸ்சில் பயணம் செய்தோர் பெரும் தொல்லைக்கு ஆளாயினர்.

இதைத் தொடர்ந்து அவர்கள் கூட்டமாக சென்று சிவாஜி கணேசன் நடிக்கும் 'தங்கப் பதக்கம்' நடக்கும் ராஜா தியேட்டரிலும், கண்ணன் தியேட்டரில் கல் வீசியுள்ளனர். தெருவில் நடந்து சென்ற பொதுமக்கள் சிதறி ஓடினர்.

இதன் காரணமாக போலீசார் அவர்களைக் கலைப்பதற்கு கண்ணீர்ப்புகைக் குண்டுகளை வீசனர்;

கல்வீச்சு, கலவரம் தொடர்பாக, எம்.ஜி.ஆர். ரசிகர்கள் 7 பேரை போலீசார் கைது செய்துள்ளனர்.

## சென்னை நகரில் 26 பேர் கைது

எம்.ஜி.ஆரின் புதிய படம் இன்று திரையிடப்படுவதை யொட்டி சென்னையில் பதட்ட நிலை நிலவுகிறது.

சென்னையில் இந்தப் படம் திரையிடப்படும் 4 தியேட்டர்களின் வாயிலிலும் ஏராளமான போலீசார் குவிக்கப் பட்டுள்ளனர்,

தியேட்டர்களில் கைக் குண்டுகள் இருப்பதாக வதந்தி நிலவுவதை யொட்டி, போலீசார் தியேட்டரில் உள்ள இருக்கைகளை யெல்லாம் சோதனை போட்டனர்.

எம். ஜி. ஆர். ரசிகர் மன்றத்தைச் சேர்ந்தவர்களெல்லாம் அடையாள கார்டுடன் வந்து கியூவில் நின்று டிக்கெட் வாங்கினார்கள்.

இன்று காலை முதலே தியேட்டரில் டிக்கெட் வாங்கும் கியூ வரிசை ஆரம்பித்து விட்டது. போலீஸ் பாதுகாப்பும் ஜரூராக செய்யப்பட்டுள்ளது.

எம். ஜி. ஆரின் தாசிகுலப் பேச்சை கண்டித்து, எம். ஜி. ஆர். படம் திரையிடப்படுவதைத் தடுத்து நிறுத்த தமிழர் பாதுகாப்புப் பேரவை நடவடிக்கை மேற்கொண்டிருப்பது தெரிந்ததே. அசம்பாவிதம் ஏதும் நடந்து விடாதபடி இருக்க சென்னையில் முக்கிய தியேட்டர்கள் இருக்கும் இடங்களில் போலீஸ் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

### 26 பேர் கைது

இந்தத் தடை உத்தரவை மீறியதாக, சென்னை சயானி டாக்கீஸ் எதிரில் 26 பேர் போலீசாரால் கைது செய்யப்பட்டனர்.

சென்னை மகாராணி தியேட்டர் எதிரில் கூட்டத்தின்மீது போலீசார் தடியடி நடத்தியதாகக் கூறப்படுகிறது.

### போலீஸ் ஐ. ஜி. பேட்டி

எம். ஜி. ஆர், படம் திரையிடப்படுவதை யொட்டி தமிழ்நாட்டில் எங்கும் அசம்பாவிதம் நடைபெற்றதாக தகவல் இல்லை என்று போலீஸ் ஐ. ஜி. கூறினார்.

குரோம்பேட்டையிலுள்ள இரண்டு தியேட்டர்களில் இன்று, எம். ஜி. ஆரின் படத்தின் காலைக் காட்சி நடைபெற்றது. எந்தவித அசம்பாவிதமும் நடைபெறவில்லை.

### புதுவையில்

பாண்டிச்சேரியில் நவீனா, கந்தன் என்ற இரண்டு தியேட்டர்களில் எம். ஜி. ஆரின் நேற்று, இன்று, நாளை என்ற படம் திரையிடப்பட்டது.

நவீனா தியேட்டரில் இந்தப் படம் திரையிடப்படுவதை, முன்னாள் அமைச்சர் டி. ராமச்சந்திரன் துவக்கிவைத்தார்.

## நெய்வேலி திட்ட விஸ்தரிப்பு: மேற்கு ஜெர்மன் உதவி

புதுடெல்லி, ஜூலை 12—நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி உற்பத்தியை அதிகரிப்பதற்கு மேற்கு ஜெர்மனி உதவி அளிக்கும்.

பழுப்பு நிலக்கரி உற்பத்தியை அதிகரிப்பதற்கு ரூ. 16 கோடி அன்னியச் செலாவணி மதிப்புள்ள யந்திர சாதனங்கள் தேவைப்படும். இவற்றை வாங்குவதற்கான அன்னியச் செலாவணியை மேற்கு ஜெர்மனி அளிக்கும்.

1974-75ம் ஆண்டுக்கு மேற்கு ஜெர்மனி மொத்தம் ரூ 112 கோடி நிதி உதவி அளிக்கிறது. நெய்வேலி திட்டத்துக்கான உதவியும் இதில் அடங்கும்.

மேற்கு ஜெர்மன் நிதி உதவி குறித்து மேற்கு ஜெர்மனியின் தலைநகரான பான் நகரில் ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது.

### எம்.ஜி.ஆர். படம் நிறுத்தப்பட்டால்

## எந்த தியேட்டரிலும் சினிமா ஓடமுடியாது: சீனிவாசன் ஆவேசம்

சென்னை, ஜூலை 12— எம். ஜி. ஆர். படங்களை ஓட அனுமதிக்காவிட்டால், வேறுஎந்தத்தியேட்டரிலும் எந்தப் படத்தையும் ஓட்டமுடியாது என்று அ. தி. மு. க. எம். எல். ஏ. சீனிவாசன் கூறினார்.

சென்னை 80 வது வட்டத்தில் அ. தி. மு. க. பொதுக் கூட்டம் நடைபெற்றது.

கே. எம். உசேன் தலைமை வகித்தார்.

இந்தக்கூட்டத்தில் கலந்து கொண்டு சீனிவாசன் பேசியதாவது:—

நேற்று இன்று நாளை படம் நடைபெற முடியாவிட்டால் தமிழகத்தில் வேறு எந்தப் படமும் இனி நடக்காது.

திரைப்படங்கள் மட்டுமல்ல நாடகம், தெருக்கூத்துக்கூட நடக்காது.

தமிழ்ப்படங்கள் மட்டுமல்ல இந்தி, இங்கிலீஷ் படங்களும் நடைபெறாது. அந்த அளவு மக்கள் கொதித்து எழுவார்கள்.

நேற்று இன்று நாளை திரையிடப்படும் நான்கு தியேட்டர்களில் படம் நடைபெறாவிட்டால் மற்ற 40 தியேட்டர்களையும் இழுத்து மூட வேண்டிய நிலையை மக்கள் ஏற்படுத்தி விடுவார்கள்.

பாம்புகூட மக்களை கேட்காமல் படமெடுக்க முடியாது. நேற்று இன்று நாளை படம் திரையிடப்பட முடியாத நிலைமைகள் தோன்றினால் தமிழக கலை உலகின் கதவுகள் இழுத்து மூடப்பட்டுவிடும்.

நேற்று இன்று நாளை படம் செக்ஸ் படமல்ல. சமுதாயத்தில் கறை ஏற்படுத்தி விடக்கூடிய படமல்ல அனைவரும் பார்க்கலாம். சிறியவர் பெரியவர் பெண்கள் இளைஞர்கள் எல்லோருமே பார்க்கலாம் என்று அரசால் Universe முத்திரை குத்தப்பட்டு உத்தரவாதம் தரப்பட்டு வெளிவரும் படம் அது என்று சீனிவாசன் பேசினார்.

## போலீஸ் மீது தமிழர் பேரவை புகார்

சென்னை, ஜூலை 12—எம். ஜி. ஆர். படம் வெளியிடுவது சம்பந்தமாகப் போலீசார் பாரபட்சமாக நடந்து கொள்ளுகிறார்கள் என்று தமிழர் பேரவை குற்றஞ் சாட்டியுள்ளது.

தமிழர் பேரவை தலைவர் முத்துராமலிங்கம் இன்று வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில், தமிழ்ப்பெண்களை தாசிகுலம் என்று பேசிய எம். ஜி. ஆர். படத்தைத் திரையிடவேண்டாம் என்று அமைதியாக கேட்டுக் கொண்ட தமிழர் பேரவைத் தொண்டர்கள் கைது செய்யப்படுகிறார்கள் என்றும், ஆனால் அ. தி. மு. க.வினர் மீது எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை என்றும் கூறியிருக்கிறார்.

## போராட்ட திட்டம்: எம்.ஜி.ஆர். ஆலோசனை

சென்னை, ஜூலை 12— சிறுபான்மையினருக்கு எதிரான வன்முறையை எதிர்த்து போராட்டம் நடத்துவது பற்றி சென்னையில் இன்று அ. தி. மு. க. தலைவர் எம். ஜி. ஆர்., வலது கம்யூனிஸ்டு தலைவர் கல்யாணசுந்தரத்துடனும், மற்றும் பல கட்சித் தலைவர்களுடனும் ஆலோசனை நடத்தினர்.

அ. தி. மு. க. தலைமையிலான சர்வ கட்சித் தலைவர்கள் கூட்டம் இன்று மயிலாப்பூர் சீனிவாச சாஸ்திரி மண்டபத்தில் நடந்தது.

இக்கூட்டத்தில் இடதுசாரி கம்யூனிஸ்டு கட்சியும், பழைய காங்கிரசும் கலந்து கொள்ளவில்லை.

இக்கூட்டம் பற்றித் தங்களுக்குத் தகவல் எதுவும் இல்லை என்றும் தாங்கள் இதில் கலந்து கொள்ளவில்லை என்றும் இடது கம்யூனிஸ்டு வட்டாரங்கள் தெரிவித்தன.

தங்கள் கட்சி சார்பில் யாரும் கலந்து கொள்ளவில்லை என்று தமிழ்நாடு பழைய காங்கிரஸ் கட்சி செயலாளர்களில் ஒருவரான திண்டிவனம் ராமமூர்த்தி கூறினார்.

சிறுபான்மையினருக்கு எதிரான வன்முறையை எதிர்த்து இயக்கம் நடத்துவதுபற்றி அ.தி.மு.க. தலைமையில் முன்னர் இதேபோல கூட்டம் நடந்தது நினைவிருக்கலாம்.

போராட்டத் திட்டங்களை வகுக்க அப்போது கமிட்டி அமைக்கப்பட்டது.

அக்கமிட்டியின் அறிக்கை இன்றையக் கூட்டத்தில் பரிசீலிக்கப்பட்டது.

### நீதிமன்றத்தில் பரபரப்பு

# சாட்சி மயங்கி விழுந்தார்

விஷ ஊசி வழக்கு

சென்னை, ஜூலை 12—விஷ ஊசி போட்டு கொலை செய்யப்பட்டதாகக் கூறப்படும் ராமநாதனின் தந்தை கோர்ட்டில் இன்று சாட்சியமளிக்கும் போது திடீரென்று மயங்கிவிழுந்தார். இதனால் பெரும் பரபரப்பு ஏற்பட்டது.

விஷ ஊசி கொலை வழக்கில் 24வது நாளான இன்று ராமநாதன் என்கின்ற வடிவுள்ளானின் தந்தை சுப்ரமணிய செட்டியாரை எதிரி வக்கீல்கள் குறுக்கு விசாரணை செய்தனர்.

முதல் எதிரி வைத்தியின் வக்கீல் ராதா கிருஷ்ணன் குறுக்கு விசாரணை செய்தபோது சுப்ரமணிய செட்டியார் தன் மகனின் முகத்தைக் கடைசியாக ஒருமுறை பார்க்க விரும்பியது பற்றி கூறியது உருக்கமாக இருந்தது.

கேள்வி:— செங்கற்பட்டில் உங்கள் மகன் புதைக்கப்பட்ட இடத்தைப் பார்த்தீர்களா?

சாட்சி பதில்:—மலேசியாவிலிருந்து என் மகனைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலில் ஓடிவந்தேன். புதைத்த இடத்தைத் தோண்டி, முகத்தையாவது பார்க்க முடியாதா என்று போலீஸ்காரர்களிடம் கேட்டேன். அதற்கு போலீஸ்காரர் மருத்துவ மனைக்குப் பின்னால் எத்தனையோ உடல்கள் பிரேத பரிசோதனைக்குப்பின் புதைக்கப்படுகின்றன. எந்த இடமென்று சரியாகத் தோண்டிப் பார்க்க முடியாது என்று கூறிவிட்டார்.

### சாட்சிக்கு மயக்கம்

அடுத்து 2-வது எதிரியின் வக்கீல் துரைபதி குறுக்கு விசாரணை செய்தபோது பதில் அளித்து வருகையில் தனக்கு மயக்கம் வருவதாக சாட்சி சுப்ரமணிய செட்டியார் நீதிபதியிடம் கூறினார்.

அதற்கு நீதிபதி "சற்று ஓய்வெடுங்கள்" என்றார்.

பின்னர் சாட்சி கூண்டை விட்டு கீழே இறங்கிவரும் போது திடீரென்று மயக்கமடைந்து சுப்பிரமணிய செட்டியார் கீழே விழுந்தார்.

அருகில் இருந்த வக்கீல்களும், போலீஸ் அதிகாரிகளும் விரைந்துவந்து அவரை தூக்கி ஆசுவாசப்படுத்தினர்.

ஒய்வு எடுத்துக் கொள்ளும்படி அவரை அமரவைத்தனர்.

ஒய்வுக்குப் பின் அவர் தொடர்ந்து சாட்சியமளிப்பார்.

### மராட்டிய காங்கிரஸ் தீர்மானம்

## காங்கிரஸ்காரர்களின் சொத்து: உச்சவரம்பு விதிக்க யோசனை

பம்பாய், ஜூலை 12—காங்கிரஸ்காரர்களின் சொத்துக்கும், வருமானத்துக்கும் உச்சவரம்பு கட்ட வேண்டும் என்று யோசனை தெரிவிக்கப்பட்டுள்ளது.

மகாராஷ்டிர பிரதேச காங்கிரஸ் நிர்வாகக் குழு இந்த யோசனையை அகில இந்திய காங்கிரஸ் செயற்குழுவுக்கு தெரிவித்துள்ளது.

அ. இ. காங்கிரஸ் சட்ட திட்டத்தில் இதற்கான திருத்தம் செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

## பம்பாயில் பதுக்கல் ஒழிப்பு வாரம்

நாக்பூர், ஜூலை 12—"பம்பாயில் உள்ள பதுக்கல்காரர்களே ஜாக்கிரதை" என்று இந்திய தேசிய மாணவர் சங்கத்தின் கன்வீனரான ரங்கராஜ் குமாரமங்கலம் எச்சரித்துள்ளார்.

இந்த மாணவர் அமைப்பின் பம்பாய்கிளை அடுத்த திங்கட் கிழமையிலிருந்து "பதுக்கல் ஒழிப்பு வாரம்" அனுஷ்டிக்கும் என்று காலஞ்சென்ற மோகன் குமாரமங்கலத்தின் மகனான ரங்கராஜ் குமாரமங்கலம் அறிவித்தார்.

"மகாராஷ்டிராவில் உள்ள பெரிய பதுக்கல்காரர்களின் பட்டியல் எங்கள் அமைப்பின் ஊழியர்களிடம் உள்ளது. இப்பதுக்கல்காரர்களில் ஒரிருவர் மீது நாங்கள் நடவடிக்கை எடுத்து அவர்களுடைய கிடங்குகளைக் கைப்பற்றுவோம். அக்கிடங்குகளை நியாயவிலைக் கடைகளாக மாற்றி அங்குள்ள பொருட்களை நியாய விலையில் விற்போம். எனினும் விற்பனைத்தொகையைஉரிமையாளரிடம் அளித்து விடுவோம்" என்று ரங்கராஜ் குமாரமங்கலம் கூறினார்.

"நாட்டில் கறுப்புப்பணம் தான் எல்லா ஊழல்களுக்கும் காரணம். சில காங்கிரஸ் மந்திரிகளும், தலைவர்களும் இதில் சம்பந்தப்பட்டுள்ளனர். எனவே கறுப்புப்பணத்தை ஒழிக்க வெகுஜன போராட்டங்களை நடத்துவோம்" என்றும் அவர் சொன்னார்.

இந்திய தேசிய மாணவர் சங்கத்தின் தேசிய அமைப்பு போராட்டத் திட்டத்தை தயாரித்து நாடு பூராவிலும் அமுல்படுத்தும் என்றார் அவர்.

## ஜெய்சங்கர் பிறந்த நாள்: பள்ளிக்கு ரூ. 2 ஆயிரம் நன்கொடை

சென்னை, ஜூலை 12—நடிகர் ஜெய்சங்கருக்கு இன்று 35-வது பிறந்த நாள். தனது பிறந்த நாளை யொட்டி ரூ. 2 ஆயிரத்தை மந்திரி ராசாராம் மூலம் ராயப்பேட்டை ஸ்ரீ வெங்கடேஸ்வரா மெட்ரிக் பள்ளிக்கு வழங்கினார்.

இன்று அதிகாலையில் எழுந்தவுடன் நடிகர் ஜெய்சங்கர் தனது தாயாரை வணங்கி அவரது ஆசியைப் பெற்றார்.

புத்தாடை உடுத்தி தனது 35-வது பிறந்தநாளை வீட்டில் எளிமையாகக் கொண்டாடினார்.

தனது பிறந்தநாளை முன்னிட்டு ரூ. 2 ஆயிரத்தை ராயப்பேட்டையில் உள்ள ஸ்ரீவெங்கடேஸ்வரா மெட்ரிக் ஸ்கூலுக்கு வழங்கினார்.

காலையில் அமைச்சர் ராசாராம் வீட்டிற்குச் சென்று, அவர் மூலமாக இந்தத் தொகையை பள்ளி நிர்வாகி திருமதி புவனா கிருஷ்ணனிடம் ஜெய்சங்கர் வழங்கினார்.

நவமணி நாளைய இதழில் ராசிபலன் வெளியாகும்

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூலை 12—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 512 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 48 75

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1160 00
உள்ளூர் 1155 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 10 70

**மணிலாப்பருப்பு**

மாரிகால பட்டாணி திரவில்லை
மொத்த விலை திரவில்லை

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 650 00
சில்லரை விலை ரூ. 7 80

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை டெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 625 90
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 700 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 196 00
முதல் ரூ. 203 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 148 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 00

**கடலெண்ணெய்க்கு**

கி.கி. கொண்ட முட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர ரூ. 76 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 408 00
முதல் ரூ. 411 00

எல்லா வகை வருமானத்திற்கும் கட்டுப்பாடு:

# மத்திய அரசாங்கத்தின் புது நடவடிக்கைகள் பற்றி பிரதமர் இந்திரா அறிவிப்பு

**பெங்களூர், ஜூலை 12— எல்லா வகை வருமானத்திற்கும் கட்டுப்பாடு விதிப்பதற்கான யோசனைகள் தயாரிக்கப்பட்டு வருவதாக பிரதமர் இந்திரா காந்தி அறிவித்தார்.**

நேற்று பெங்களூரில் சமூக, பொருளாதார மாற்றக் கழகத்தில் பிரதமர் இந்திரா விசேஷ உரை நிகழ்த்தினர். இந்திரா கூறியதாவது:— ''நாட்டில் பணப்பெருக்கத்தைச் சமாளிக்க மத்திய அரசு உறுதியான நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது.

பணப் பெருக்கத்தைச் சமாளிப்பதற்காக சமீபத்தில் மத்திய அரசு 2 அவசர சட்டங்களை (ஊதிய முடக்கம், டிவிடெண்டுக்கு உச்ச வரம்பு ஆகியவைபற்றிய அவசர சட்டங்கள்) பிறப்பித்து, மற்ற எல்லாவகை வருமானத்திற்கும் கட்டுப்பாடு விதிப்பதற்கான யோசனைகள் வகுக்கப்பட்டு வருகின்றன.

### வருமான வரி

சுயமாக வேலை செய்கிறவர்களுக்கும் (டாக்டர்கள், எஞ்சினீயர்கள் போன்ருேர்) சிறு வியாபாரிகளுக்கும் வருமான வரியின் வரம்புக்குள் கொண்டுவர தக்க முயற்சிகளை மேற்கொள்ளும்படி வருமான வரி இலாகாவுக்கு உத்திரவிடப்பட்டுள்ளது.

வருமானத்தை ஒழுங்குபடுத்துவதற்கான மத்திய அரசாங்கத்தின் நடவடிக்கைகள் இதுவரை விவசாயத் துறையை பாதிக்கவில்லை. இது விஷயமாக மாநில அரசுகளின் ஒத்துழைப்பு, மத்திய அரசுக்கு தேவைப்படுகிறது. நிலவரியை மீண்டும் விதிப்பது, நிலப்பிரபுக்கள் மீது சர்சார்ஜ் விதிப்பது, நீர்ப்பாசன காரியங்களுக்கு வர்த்தக கட்டணத்தில் தண்ணீர் சப்ளை செய்வது போன்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

### வங்கி கடன்

வர்த்தகத் துறைக்கு வங்கிகள் அளிக்கும் கடன்மீது கடுமையான கண்காணிப்பு நடத்தப்படும்.

உணவுத் தானியங்கள், வர்த்தகப் பயிர்கள் ஆகியவைகளுக்கு விலைவாசிகளை நிர்ணயிப்பதில், பணப்பெருக்கத்தைத் தடுப்பதற்கான நோக்கத்துடன் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

உணவுத் தானியங்கள், துணி, சமையல் எண்ணெய் வகைகள் முதலியவைகளின் உற்பத்தியைப் பெருக்க முக்கிய முடிவுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

பணப்பெருக்கத்தின்காரணமாக மிகவும் பாதிக்கப்பட்டவர்கள் தொழிலாளர்களே. அவர்களுடைய ஊதியத்தில் ஒரு பகுதியை தற்காலிகமாக நிறுத்திவைப்பதன் மூலம் அவர்களின் எதிர்கால நலன்களைப் பாதுகாக்க முடியும், என்ருர் இந்திரா.

### இந்திரா எதிர்ப்பு ஆர்பாட்டம்

பிரதமர் இந்திரா காந்தி நேற்று பெங்களூருக்கு வருகை தந்தபோது அவரை எதிர்த்து செங்கொடி ஆர்ப்பாட்டம் நடந்தது. சமீபத்தில் மத்திய அரசு பிறப்பித்த ஊதிய முடக்க அவசர சட்டத்தை எதிர்த்து சுமார் 1,000 தொழிலாளர் இந்த ஆர்ப்பாட்டத்தை நடத்தினர்கள்.

## ஊதிய முடக்க உத்தரவு: குசேலர் கண்டனம்

சென்னை, ஜூலை 12— ஊதிய முடக்க உத்தரவைக் கண்டித்து உழைக்கும் மக்கள் மாமன்றத்தின் சார்பில் குசேலர் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

மத்திய அரசின் ஊதிய முடக்க அவசரஉத்தரவுகளைப் பார்த்து நாட்டில் உள்ள வழைக்கும் மக்கள் அதிர்ச்சியுற்றுள்ளனர். ஊதிய உயர்வுகள் பாங்கியில் சேர்த்துவிட வேண்டும் என்று உத்தரவு இடப்பட்டிருக்கிறது. பஞ்சப்படி உயர்வு இருக்குமாஞல் அதுவும்பெருமளவுக்கு பாங்கியில் சேர்ப்பிக்கவேண்டும் என்றும் உத்தரவு கூறுகிறது. பஞ்சப்படி உயர்வு என்பது ஏறுகின்ற விலைவாசியை சரிகட்ட கொடுக்கும் படியாகும்.

அந்தப் பஞ்சப்படியை தொழிலாளிக்கு கொடுக்கக்கூடாது என்று உத்தரவு கூறுகிறபோது விலையும் ஏருது என்று பார்த்துக்கொள்ளப்படும் என்ற உத்தரவு ஒன்றும் இல்லை.

அப்படியென்ருல் எவ்வளவு விலை ஏறினுலும் இப்பொழுது கிடைக்கக்கூடிய சம்பளத்திலிருந்துதான் சரிக்கட்டிக் கொள்ளவேண்டும்.

இதன் விளைவுகளைப் பார்ப்போம். இன்று 1லிட்டர்அரிசி 2ரூபாய்என்று வைத்துகொள்ளலாம். இன்னும் கொஞ்ச நாட்களில் அது ரூபாய் 4 ஆனுல் 40 லிட்டர் வாங்கக்கூடிய குடும்பத்தில் இவ்வுத்தரவின் மூலம் 20 லிட்டர் தான் வாங்கமுடியும். ஆகவே இந்த உத்தரவுகள் தொழிலாளி வயிற்றில் அடிக்கும் '...கள்' என்றுதான் சொல்ல வேண்டியுள்ளது.

இந்த உத்தரவால் பண வீக்கம் குறையுமா? ரூ. 10,000 கோடி கள்ளப்பணம் நாட்டில் இயங்கிக் கொண்டிருக்கும் போது இந்த உத்தரவால் எப்படி பண வீக்கம் குறையும்? கள்ளப் பணம், பதுக்கல் வர்த்தக சூதாட்டங்கள்; கள்ளநோட்டு அடித்தல் போன்ற காரியங்களிஞல்தான் பண வீக்கம் ஏற்படுகிறதொழிய சம்பள உயர்வால் அல்ல. ஆகவே மேற்சொன்ன சமூக விரோதிகளை ஒடுக்க நடவடிக்கை எடுப்பதற்குப் பதிலாக மேற்சொன்ன விரோதிகளால் பாதிக்கப்படுகின்ற தொழிலாளர்களை மேலும் பாதிப்புக்கு உள்ளாக்கியருக்கிறது.

இவ்வாறு குசேலர் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

## தி. மு. க. எம். எல். ஏ. தேர்தல் வழக்கில் தீர்ப்பு

சென்னை, ஜூலை 12— சங்கராபுரம் தொகுதியிலிருந்து சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாச்சியப்பன் (தி. மு. க.) இத்தேர்தலில் வேட்பு மனு தாக்கல் செய்யப்பட்ட நேரத்தில் அரசாங்க காண்ட்ராக்டராக இல்லை என்பதால் அவருடைய தேர்தல் செல்லும் என சென்னை ஹைகோர்ட் நீதிபதி வி. ராமசாமி தீர்ப்பளித்தார்.

நாச்சியப்பன் தேர்ந்தெடுக்கப்பட்டதை ஆட்சேபித்து இத்தேர்தலில் தோற்ற துரைமுத்துசாமி (பழையகாங்கிரஸ்) சென்னை ஹைகோர்ட்டில் முதலில் வழக்குத்தொடர்ந்தார். அது தள்ளுபடி செய்யப்பட்டது.

பின்னர் அவர் சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்தார்.

''நாச்சியப்பன் அரசாங்க காண்ட்ராக்டர். என்வே அவருடைய வேட்பு மனுவை தேர்தல் அதிகாரி ஏற்றது தவறு என்று சுப்ரீம் கோர்ட்டில் அவர் கூறினர்.

சுப்ரீம் கோர்ட் பின்னர் இந்த வழக்கை ஹைகோர்ட்டுக்கு அனுப்பி இந்த விஷயத்தைப் பரிசீலிக்கும்படி உத்தரவிட்டது.

நீதிபதி வி. ராமசாமி இந்த வழக்கை விசாரித்தார். வேட்பு மனுக்கள் 1971 பிப்ரவரி 4-ந்தேதி பரிசீலிக்கப்பட்டுள்ளன. அரசாங்கத்துடன் நாச்சியப்பனுக்கு இருந்த காண்ட்ராக்டுகள் 1971 ஜனவரி 21ந் தேதி ரத்து ஆகின. எனவே வேட்பு மனு தாக்கல் செய்யப்பட்ட சமயத்தில் அவர் அரசாங்க காண்டராக்டர் அல்ல. எனவே அவருடைய வேட்பு மனுவை தேர்தல் அதிகாரி ஏற்றது சரியே என்று நீதிபதி தனது தீர்ப்பில் கூறினர்.

நெடுஞ்செழியன் அன்பழகன் பக்கவாத்தியங்களா?

# விகடம் பேசுவோரிடம் அதற்கும் ஆள் இல்லையே கருணாநிதி பேச்சு

**சென்னை, ஜூலை 12—''நெடுஞ்செழியனும், அன்பழகனும் கருணாநிதியின் பக்க வாத்தியங்கள் என்று சொல்பவர்களிடம், அதற்கும் ஒழுங்கான ஆள் இல்லையே'' என்று முதல்வர் கருணாநிதி கூறினர்.**

அமைச்சர் நெடுஞ்செழியன் பிறந்த நாள் விழாப் பொதுக் கூட்டத்தில் கருணாநிதி பேசியதாவது:—

சிலபேர் விகடம் பேசலாம். கருணாநிதிக்கு, நெடுஞ்செழியனும் அன்பழகனும் பக்க வாத்தியங்கள் என்று பேசலாம். நெடுஞ்செழியன் ஒரு ரப்பர் ஸ்டாம்பு என்று கூறலாம். அதை நாவலரே சில கூட்டங்களில் சொல்லியிருக்கிருர். வாதத்திற்கு, அவர்களுடைய உவமையை அப்படியே எடுத்துக் கொள்வதானுல், நாவலர் ரப்பர் ஸ்டாம்பு தான், எந்த ஒரு விவகாரமும் ஸ்டாம்பு குத்தாமல் முடிவதில்லை என்ருல், நான் எடுக்கின்ற எந்த ஒரு முடிவும் நாவலர் என்கிற ரப்பர் ஸ்டாம்பு இல்லாமல் அது நிறைவேறுவதில்லை என்பதைத்தான் அது காட்டுகிறதேயல்லாமல்வேறல்ல.

### சுருதிகெட்ட சங்கீதம்

பக்க வாத்தியமென்ருல் என்ன இழிவா? பக்கவாத்தியம் சரியாக இல்லாவிட்டால் கச்சேரியே சுவைக்காது. அது சுருதியோடு சங்கீதம் கேட்ட ரசிகர்களுக்குத் தெரியும். சுருதி கெட்ட சங்கீதம் கேட்ட ரசிகர்களுக்கு அது புரியாது.

ஒரு படம் பார்த்திருப்பீர்கள். கலைவாணர் என். எஸ். கே. நடித்த படம். கலைவாணர் அதிலே ஒரு நல்ல சங்கீத வித்வானாக வருவார். கச்சேரிக்குச் செல்ல வேண்டிய நேரத்தில் பக்கவாத்தியக்காரர் மிருதங்க வித்வான் எங்கேயோ காணாமற் போய் விடுவார். கச்சேரிக்கு நேரமாகி விடுகிறது. மண வீட்டார் வா வா என்று அழைக்கிருர்கள். இவரோ பக்கவாத்தியக்காரர் இல்லாமல் திணறுகிருர். கடைசியாக எப்படியாவது, கச்சேரியை முடித்தாக வேண்டுமே என்ற அவசரத்தில் ஊரை சுற்றித் தேடுகிருர். ஒரு இடத்தில் புலி வேஷம் ஆடிக் கொண்டிருக்கிருர்கள். அங்கே புலி வேஷத்துக்கு ஏற்றவாறு ஒருவர் தப்பட்டை அடித்துக் கொண்டிருக்கிருர். அந்த புலி வேஷத்துக்கு தப்பட்டை அடிக்கிறவரைப் பிடித்துக் கொண்டு போய் இவர் கச்சேரி மேடையிலே உட்காருகிருர். உட்கார்ந்து பாடுகிருர்.

பாட்டுகூட எனக்கு ஞாபகமிருக்கிறது. ''ராம நீ சமானமெவரு'' என்கிற பாடல்... அந்தப்பாட்டைப் பாடுகிருர்; பாடிவிட்டு மிருதங்கவித்வான் அடிக்கிருரா என்று பார்க்கிருர்.

### டங்கு டங்கு...

மிருதங்க வித்வானுக இருந்தாலல்லவா அடிப்பார். அவர் புலிவேஷத்துக்கு வேண்டிய ''டங்கு டங்கு'' என்ற ஓசையை முழக்குகிருர்.

இவர் இரண்டு முறை பாடிப் பார்த்தார். மிருதங்க வித்துவான் அடிக்கவில்லை. ஏனென்ருல் மிருதங்க வித்துவான் அல்ல அவர்; புலிவேஷ வாத்தியக்காரர்.

மூன்ருவது முறை கலைவாணர் அந்த வாத்தியத்துக்குத் தக்கபடி பாட ஆரம்பித்து விட்டார். அவர் எவ்வளவு வேகமாக அடிக்கிருரோ அவ்வளவு வேகமாக 'ராம நீ சமானமெவரு! 'ராம நீ சமானமெவரு' என்ற அந்த புலி வேடக்காரனுக்குத் தகுந்தாற்போல் பாட ஆரம்பித்து விட்டார்.

### கலை கட்டும் கச்சேரி

அதுபோலத்தான் இன்றைக்கு நாவலரும்பேராசிரியரும் எனக்கு பக்கவாத்தியங்கள் என்று சொல்லுகிருர்களே இவர்கள் பக்க வாத்தியங்கள் என்பது உண்மையாஞல் சரியான பக்கவாத்தியங்கள்; கலை கட்டக்கூடிய கச்சேரி.

ஆஞல் அவர்களிடத்திலே இருக்கிற பக்கவாத்தியங்கள் புலிவேஷத்திலே பிடித்தவை. ஆகவே அந்த பக்கவாத்தியங்களுக்குத் தக்கபடி இன்றைக்கு அவர்கள் பாடிக்கொண்டிருக்கிருர்களே அல்லாமல் அவர்கள் பாட்டுக்கு, ஒழுங்காக பக்கவாத்தியம் வாசிக்க ஆள் கிடையாது. அதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இவ்வாறு கருணாநிதி கூறினர்.

# காமராஜ் பிறந்த நாள் 3 நாள் நடக்கும் விழா: சிறப்பான ஏற்பாடுகள்

**சென்னை, ஜூலை 12—பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜ் பிறந்த நாள் வருவதையொட்டி 3 நாட்கள் சிறப்பாக விழா எடுத்து நிகழ்ச்சிகளை நடத்த காங்கிரஸ் கட்சியினர் ஏற்பாடு செய்துவருகின்றனர்.**

வருகிற 15ம் தேதி பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜரின் பிறந்தநாள் வருகிறது.

3 நாள் விழா நிகழ்ச்சிகள் குறித்து தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி செயலாளர் திண்டிவனம் க. ராமமூர்த்தி அறிக்கை ஒன்றை வெளியிட்டுள்ளார்.

காமராஜ் பிறந்தநாள் விழா வையொட்டி 19, 20, 21 ஆகிய மூன்று நாள் நிகழ்ச்சிகளுக்கான ஏற்பாடுகள் முழுமை பெற்று வருகிறது.

### கண்ணதாசன்

ஜூலை 19-ம் நாள் வெள்ளிக்கிழமையன்று கவிஞர் கண்ணதாசன் பொறுப்பில் சத்தியமூர்த்தி பவன் திறந்த வெளி அரங்கில் கவியரங்கம் நடைபெறுகிறது. தமிழகத்தின் தலைசிறந்த கவிஞர்கள் இதில் பங்கேற்கின்றனர்.

ஜூலை 20-ம் நாள் சனிக்கிழமை தேனும்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நாள் முழுவதும் கருத்தரங்கு நடைபெறுகிறது. இக்கருத்தரங்கின் பொறுப்பினை தமிழ்நாடு காங்கிரசின் மாதர், மாணவர், தொழிலாளர், இளைஞர் பிரிவுகளைச் சேர்ந்த அமைப்பாளர்கள் ஏற்றுள்ளனர். கருத்தரங்கின் காலை நிகழ்ச்சிகளுக்கு தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் முன்ஞள் தலைவர் கக்கன் தலைமை தாங்குகிருர். பிற்பகல் நிகழ்ச்சிகளுக்கு முன்ஞள் சட்டப் பேரவைத் தலைவர் செல்லபாண்டியன் தலைமை தாங்குகிருர்.

ஜூலை 21-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை கடற்கரை திலகர் திடலில் பொதுக்கூட்டம் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பா. ராமச்சந்திரன் தலைமையில் நடைபெறுகிறது. தமிழக காங்கிரசின் முன்னணித் தலைவர்கள், முன்னணிப் பேச்சாளர்கள் அனைவரும் பங்கு கொள்கின்றனர்.

### சிவாஜி

ஜூலை 20, 21 இரண்டு நாள் நிகழ்ச்சிகளிலும் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் கலந்துகொண்டு பேசுகிருர்.

இவ்வாறு தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி செயலாளர் திண்டிவனம் க. ராமமூர்த்தி அறிவித்துள்ளார்.

மக்கள் சபை உபதேர்தல்

## புது காங்கிரஸ் தோல்வி

அலகாபாத், ஜூலை 12— காங்கிரஸ் கட்சியின் ''கோட்டை'' என்று கருதப்பட்ட அலகாபாத் மக்கள் சபைத் தொகுதியில் நடந்த உபதேர்தலில் புது காங்கிரஸ் தோற்றுள்ளது.

இத்தொகுதியில், புது காங்கிரஸ் வேட்பாளரை விட 18 ஆயிரம் ஓட்டு அதிகம் பெற்று பாரதீய கிராந்தி தனிக்கட்சி வேட்பாளர் ஜானஸ்வர் மிஸ்ரா வெற்றி பெற்ருர்.

இத் தொகுதி முன்னர் காலஞ்சென்ற பிரதமர் லால் பகதூர் சாஸ்திரியின் தொகுதியாக இருந்துவந்தது. அவருடைய மறைவுக்குப் பின்னர் லால்பகதூரின் மகன் இத் தொகுதியில் காங்கிரஸ் சார்யில் போட்டியிட்டுவென்ருர்.

1971 தேர்தலில் இத் தொகுதியில் இப்போதைய மாநில முதல்வரானஎச்.என். பகுகுண வெற்றி பெற்ருர்,

முன்னர் மத்திய மந்திரியாக இருந்த பகுகுண மாநில முதல்வரான பிறகு தனது எம்.பி. பதவியை ராஜிநாமா செய்ததால் இப்போது உப தேர்தல் நடந்தது.

1952ம் ஆண்டிலிருந்து காங்கிரசின் கோட்டையாக இருந்துவந்த இத்தொகுதியை இப்போது எதிர்க்கட்சியான பாரதிய கிராந்தி தளம் கைப்பற்றியுள்ளது.

''நாட்டில் தற்போதுள்ள பொருளாதார சங்கடங்களே காங்கிரசின் தோல்விக்குக் காரணம்'' என்று மாநில முதல்வர் பகுகுண கூறினர்.

## சுதந்திர தினத்தில் புதிய எதிர்க்கட்சி

புதுடெல்லி, ஜூலை 12— புது காங்கிரஸ் கட்சிக்கு மாற்ருக அமைக்கப்படும் புதிய எதிர்க்கட்சி ஆகஸ்ட் 15-ந் தேதி அல்லது அதற்கு முன்னதாகத் துவக்கப்பட்டுவிடும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

சுதந்திரா, பாரதியகிராந்தி தளம் சம்யுக்த சோஷலிஸ்டு கட்சி லோக தந்திரிக் தளம், உத்தி கிசான் சங்கம், உத்கல் காங்கிரஸ், ஹரியாஞ சங்கர்ஷ சமிதி ஆகிய 7 கட்சிகள் சேர்ந்து இப்புதிய கட்சியை அமைக்கின்றன.

நகல் திட்டத்தின்படி இந்த 7 கட்சிகளும் கலைக்கப்பட்டு புதிய சின்னம், புதிய திட்டம் ஆகியவற்றுடன் ஒன்றுபட்ட புதிய கட்சியாக செயல்படும்.

புதிய கட்சியானது வட நாட்டில் வலுள்ளதாக இருக்கும். இக்கட்சியில் தலைவர்களுக்குப் பஞ்சமில்லை. சரண்சிங், பிலூ மோடி, ராம்சுபாக் சிங், பால்ராஜ் மாதோக், பிஜு பட்நாயக், ராஜ்நாராயண், மது மேத்தா ஆகியோர் இக்கட்சியின் முக்கிய தலைவர்களாவர்.

எம். ஜி. ஆர். படத்துக்கு எதிராக

# சினிமா தியேட்டர்கள் மீது தாக்குதல் அரிவாள் வெட்டு: 14 பேர் கைது

**மதுரை, ஜூலை 12—எம். ஜி. ஆரின் புதிய படம் திரையிடப்பட இருந்த தியேட்டரின் திரைக்குத்தீயிட்டுக் கொளுத்தப்பட்டது சம்பந்தமாக 14 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்,**

மதுரை சிந்தாமணி தியேட்டரில் எம். ஜி. ஆர். நடித்த நேற்று, இன்று, நாளை திரையிடப்படும் என்று விளம்பரம் செய்யப்பட்டிருந்தது.

நேற்று முன் தினம் இரவு 2-30 மணிக்கு சுமார் 30 பேர் கூட்டமாக வந்து சுவர் ஏறிக்குதித்து, படம் காட்டும் திரையைத் தீ வைத்துக் கொளுத்தியதாகக் கூறப்படுகிறது.

தியேட்டரில் புகைப்படங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கும் கண்ணுடி பெட்டிகள், மின் விளக்குகள், ஜன்னல்கள் எல்லாம் உடைத்து நொறுக்கப்பட்டன.

தியேட்டர் முகப்பில் பேனர் கட்டும் வேலை அப்போது நடந்துகொண்டிருந்தது. அந்த வேலையில் ஈடுபட்ட மூன்று பேர் அரிவாளால் வெட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது.

தகவல் அறிந்ததும் போலீசார் விரைந்து வந்து 14 பேர்களை கைது செய்தனர்.

சென்னை சயானி டர்க்கீசில் நேற்று இன்று நாளை படம் திரையிடப்படுவதை ஒட்டி, அங்கு, இரவு 8-45 மணிக்கு சிலர் புகுந்து சோடா புட்டி வீசினர். திரை கிழிக்கப்பட்டது.

அப்போது மாலைக்காட்சி நடந்து கொண்டிருந்தது. இந்தத் தாக்குதலின் விளைவாக படக்காட்சி அரைமணி நேரம் முன்னதாகவே நிறுத்தப்பட்டது பிறகு, திரைக்கு தையல் போட்டு இரவு காட்சி நடைபெற்றது.

### திண்டுக்கல் நகரசபை தலைவர் கைது

திண்டுக்கல்லில் எம். ஜி. ஆர். படம் திரையிட இருக்கும் தியேட்டருக்கு சென்று அந்தப் படத்தைத் திரையிடக் கூடாது என்று கூறியதாக, நகரசபைத் தலைவர் பொன். சீனிவாசன் கைது செய்யப்பட்டு, பிறகு ஜாமீனில் விடுதலை ஆஞர்.

### ஆலங்குளத்தில் ஆர்ப்பாட்டம்

நெல்லை மாவட்டம் ஆலங்குளத்தையடுத்த சுரண்டை கிராமத்தில் ஒரு டூரிங்சினிமா கொட்டகையில் எம். ஜி. ஆர். நடித்த நல்லநேரம் என்ற படம் நடந்துகொண்டிருந்தது. படம் பார்த்துக் கொண்டிருந்த சிலர் திடீரென்று எழுந்து படத்தை நிறுத்து என்று குரல் எழுப்பி ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

பிறகு போலீசார் வந்து அமைதி ஏற்படுத்தினர். மீண்டும் படம் ஓடியது. ஆஞல் சிறிது நேரத்தில் மின்சாரம் துண்டிக்கப்பட்டது. இருட்டில் ஒரே கூச்சலும் குழப்பமாக இருந்தது. மின்சார ஊழியர்கள் வந்து மீண்டும் மின்சார இணைப்புக் கொடுத்தனர். இதனல் 1½ மணி நேரம் தாமதமாக படம் ஓடியது.

### திருமணம்

சென்னை, ஜூலை 12—வழக்கறிஞர் என். சுப்பிரமணிய அய்யரின் மகனும், எக்ஸ்பிரஸ் பத்திரிகை நிருபருமான குருதாசுக்கும் டி. ஆர். சுப்பிரமணிய அய்யரின் மகள் இந்திராவுக்கும் மயிலை சிவகாமி அம்மாள் திருமண மண்டபத்தில் நேற்று சிறப்பாக திருமணம் நடந்தது.

# இடி விழுந்து 25000 மரங்கள் நாசம்

ஹெல்சிங்கி, ஜூலை 12— கண்ணைப் பறிக்கும் மின்னலுடன் பயங்கர இடி விழுந்தபோது கண்ணிமைக்கும் நேரத்தில் ஒரே சமயத்தில் 25 ஆயிரம் மரங்கள் முறிந்து விழுந்தன.

இச்சம்பவம் ஐரோப்பாவில் பின்லாந்து நாட்டின் மத்திய பகுதியில் நடந்தது.

இடிவிழுந்ததால் 283ஹெக்டார் நிலத்தில் இருந்த காடுகள் தரைமட்டமாகின.

காடுகளின் நடுவே இடி விழுந்த இடத்தில் 3 மீட்டர் நீளமும், ஒரு மீட்டர் அகலமும் கொண்ட திறப்பு ஏற்பட்டது என்று இக்காடுகளின் உரிமையாளர்கள் கூறினர்.

இடிவிழுந்து மரங்கள் நாசமானதால் பல லட்சம் டாலர் மதிப்புக்கு இழப்பு ஏற்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

# சென்னையில் ரூ.15 லட்சம் கடத்தல் சாமான்கள் பறிமுதல்

சென்னை, ஜூலை 12—கடந்த ஜூன் மாதத்தில் மட்டும் ரூ. 14,96,030 மதிப்புள்ள கள்ளக் கடத்தல் பொருள்கள் சென்னையில் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன.

பறிமுதல் செய்யப்பட்ட பொருள்களில் ரூ 1,92,882 மதிப்புள்ள 4148 கிராம் தங்கமும் உள்ளது. மற்றும் ரூ. 78,398 மதிப்புள்ள 736 கைக்கடிகாரங்களும், ரூ 1,64,163 மதிப்புள்ள 142.750 கிலோ கிராம் அபினியும் ரூ. 2,81,..4 மதிப்புள்ள செயற்கை பட்டு இழைகளும் கைப்பற்றப்பட்டுள்ளது.

இந்தக் கள்ளக் கடத்தல்கள் சம்பந்தமாக 14 பேர் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளனர்.

மற்றும் 3 பேர்களுக்கு கோர்ட்டில் தண்டனை வழங்கப்பட்டுள்ளது.

இந்தத் தகவல்களை சுங்க இலாகா அடிஷனல் கலெக்டர் எச். என். சிங். அறிவித்துள்ளார்.

# அண்ணா வழியை பின்பற்றி நடப்பவர் நெடுஞ்செழியன்: கருணாநிதி பாராட்டு

**சென்னை, ஜூலை 12—அண்ணாவின் வழியைப் பின்பற்றி நடப்பவர் நெடுஞ்செழியன் என்று முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.**

**"நெடுஞ்செழியனுக்கும் எனக்கும் மோதலை உண்டாக்கி பிளவு ஏற்படுத்த சிலர் எடுத்த முயற்சி ஈடேறவில்லை" என்றும் கருணாநிதி கூறினார்.**

நெடுஞ்செழியனின் 55-வது பிறந்த நாளை ஒட்டி அவருக்கு நேற்று பாராட்டு விழா நடத்தப்பட்டது.

தேனாம்பேட்டையில் உள்ள அண்ணா அறிவாலய திடலில் விழா நடைபெற்றது.

சென்னை மாவட்ட தி.மு.க. செயலாளர் சீதாபதி தலைமை வகித்தார்.

அமைச்சர் அன்பழகன், ம. பொ. சி, அப்துல் சமது எம்.பி. சிட்டிபாபு எம். பி. ஆகியோர் நெடுஞ்செழியனைப் பாராட்டிப் பேசினர். விழாவின் இறுதியில் குமாரி விஜயாவின் கலா நிகழ்ச்சி நடைபெற்றது.

நெடுஞ்செழியனைப்பாராட்டி கருணாநிதி பேசியதாவது:—

இங்கே ம. பொ. சி. பேசும் போது. "வயதில் இளையவராக இருக்கிற கருணாநிதியை நாவலர் தன்னுடைய தலைவராக ஏற்றுக்கொண்டிருப்பதே அவரின் பெரிய உள்ளத்திற்கு சான்று' என்று குறிப்பிட்டார்.

அண்ணாவின் வழியைத்தான் நாவலர் அப்படியே, பின்பற்றியிருக்கிறார் என்பதற்கு அதைவிட வேறு ஒரு சான்று இருக்க முடியாது.

ஏனென்றால் திருச்சியில் நடைபெற்ற தி. மு. கழக மாநில மாநாட்டில் - அப்போது தான் கழகத்தின் பொது செயலாளராக தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த நாவலர். அந்த மாநாட்டிற்கு முறைப்படி தலைமை வகிக்க வேண்டிய கட்டத்தில் நாவலரை வழி மொழிந்து பேசிய அண்ணா நீண்ட நேரம் எதுவும் பேசாமல் இரண்டொரு வாக்கியங்களிலே குறிப்பிட்டபோது,

"தம்பீ, வா, தலைமை ஏற்க வா, உன் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடக்கிறோம். வா !" என்றார்.

## அண்ணா வழியில் நெடுஞ்செழியன்

அண்ணா எப்படி நாவலரைப் பார்த்து "தம்பீ, வா, தலைமையேற்க வா" என்று அழைத்தாரோ அதே வழியைத்தான் நாவலரும் பின்பற்றி என்னைப் பார்த்து "தம்பீ வா, தலைமை ஏற்க வா" என்று ஒத்துக்கொண்டிருக்கிறாரே யல்லாமல் வேறல்ல. அண்ணாவழியில் நாவலர் பயணம் நடத்துகிறார் என்பதற்கு இது சரியான அடையாளமாகும்.

நாவலருடைய தமிழும் அந்தத் தமிழை எடுத்தாளுகின்ற அவருடைய திறனும், ஒரு நாளைக்கு 20 அல்லது 30 நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிற உள்ள உறுதியும், உடல் வலிவும் இன்று கழகத்தைக் கட்டிக்காத்த காரணங்களில் ஒன்று என்பதை யாராவது மறந்து விடுவார்களானால் அவர்கள் நன்றி மறந்தவர்களாவார்கள்.

இந்த அரசு இந்தியாவிலே இருக்கிற மற்ற அரசுகளுக்கெல்லாம் மேலான அரசாக —இந்தக் கழகம் இந்தியாவிலே இருக்கிற மற்ற அரசியல் கட்சிகளை விட கட்டுக்கோப்புமிகுந்த கட்சியாக விளங்குகிறது என்கிற பாராட்டுதலை, போற்றுதலை, சிலம்புச் செல்வரும், அப்துல் சமதும் இங்கே எடுத்துச் சொன்னார்கள்.

## துரோகிகள் முயற்சி

எனக்கும், நாவலருக்கும் பேராசிரியருக்கும் இடையில் இன்னும் கழகத்திலே உள்ள மூத்தத் தலைவர்களிடையே வேறுபாடுகளை உருவாக்க எவ்வளவோ பேர் முயன்றிருக்கிறார்கள்.

அதன் காரணமாக கட்டுப்பாடு குலையாதா? இவர்களுக்குள்ளே வேற்றுமை எழாதா? முரண்பாடுகள் முளைக்காதா? யாராலும் அசைக்க முடியாத இந்தக் கோட்டையை அசைத்து விட மாட்டோமா என்றெல்லாம் தமிழகத்திலே இருக்கிற மாற்றுக்கட்சிக்காரர்கள் முயன்று அவர்களால் முடியாமல், வேற்று மாநிலத்தார் அந்த முயற்சியில் ஈடுபட்டு அவர்களாலும் இயலாமல் டெல்லியிலே இருக்கிறவர்களை முயற்சித்து இந்தக் கழகத்திலே ஒரு பிளவை-சரிவை ஏற்படுத்தி ஒரு சோதனையை உருவாக்கி விட வேண்டுமென்று எண்ணியவர்கள் ஒரு சில துரோகிகள் இன்று கிடைத்த காரணத்தால் அந்த முயற்சியிலே மகிழ்ச்சி அடைந்திருக்கலாமே தவிர எங்களைப் பிரித்து அல்லது கழகத்தின், கட்டுக்கோப்பை உடைத்து யாரும் வெற்றி பெற்றார்கள் என்று இன்றைக்கல்ல, என்றைக்கும் சொல்ல முடியாது.

## திடீர் தலைவர்கள் அல்லர்

இங்கே நம்முடைய நண்பர் ஒருவர் அமர்ந்திருக்கிறார். பட்டுக்கோட்டையை சேர்ந்த டேவிஸ் என்பவர். பல பேருக்கு அவரைத் தெரியாது, ஒரு காலத்தில் அவருடைய பேச்சையெல்லாம் கேட்டு நாங்கள், இந்தக் கட்சிக்கு, இந்த உள்ளத்துக்கு விறுவிறுப்பைத் தேடிக் கொண்டவர்கள். அப்படிப்பட்டவர்களுடைய பொதுக் கூட்டங்களுக்குச் சென்று அவர்களது பேச்சைக் கேட்டு தொண்டராக வளர்ந்து இன்றைக்கு தலைவராக ஆகியிருக்கிறோமேயல்லாமல் திடீர் தலைவராக ஆனவர்கள் நானோ நாவலரோ, பேராசிரியரோ அல்ல இந்த இயக்கத்தோடு சேர்ந்து வளர்ந்தோம். பெரியாருடைய பாசறையிலே இருந்து வளர்ந்தோம். பெரியார் அவர்களுடைய பள்ளிக்கூடத்திலே படித்தோம். அண்ணா அவர்களுடைய நிழலில் வளர்ந்தோம். அறிஞர் அண்ணா அவர்களோடு அமர்ந்து அரசியல் சிந்தனைகளை செய்தோம். அரசியல் பேசினோம். அப்படி வளர்ந்தவர்கள் நாங்கள். அப்படி வளர்ந்தவர்களாகிய எங்களிடத்திலே பொறுமை கடலாக அமைதியின் உருவமாக அடக்கத்தின் சிகரமாக இருப்பவர்தான் நடமாடும் பல்கலைக் கழகமாக இருக்கும் நாவலர். அந்த நாவலர் வாழ்க! பல்லாண்டு வாழ்க, பல்வளமும் பெற்று வாழ்க! தமிழ்ச் சமுதாயம் எல்லா நலமும்பெற்று விளங்க நாவலர் நீண்டகாலம் வாழ்க! வாழ்க! என வாழ்த்துகிறேன்.

இவ்வாறு கருணாநிதி பேசினார்.

# வாலிபரின் வீரச்செயல்: இந்திரா பாராட்டு

போபால், ஜூலை 12—ஷியாம் சந்த்வானி என்பவர், நாடு விடுதலை பெற்ற பிறகு பிறந்து வளர்ந்த புதிய சந்ததியைச்சேர்ந்த இளைஞர். இவரது வாழ்க்கைக் கண்ணோட்டம் மாறிவிடினும், தாய்நாட்டின்பால் கொண்டிருக்கும் ஈடுபாடு மாறவில்லை.

மத்தியப் பிரதேச மாநில பஸ் போக்குவரத்துக் கார்ப்பொரேஷனின் மண்டலப் பணிமனை ராய்ப்பூரில் அமைந்துள்ளது. சென்ற மே 8-ந் தேதி மாலை 3.30 மணியளவில் இங்குப் பெரிய தீவிபத்து ஏற்பட்டது. பணிமனையில் சுமார் 75 பஸ்களும், ஏராளமான டயர்களும், டீஸல் எண்ணெயும் இருந்தன. தீ விரைந்து பரவியது. ஒரு சில நிமிடத்தில் பல பஸ்கள் தீப்பற்றி எரிந்தன.

அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்த மாணவர்கள் சிலர், தீவிபத்தைக் கண்டதும் தங்களுக்கு ஏற்படக்கூடிய ஆபத்தைப் பொருட்படுத்தாமல் விரைந்து உதவி, அளித்து அறுபதுக்கு மேற்பட்ட பஸ்களையும், விலையுயர்ந்த வேறு பல பொருட்களையும் தீயினின்று மீட்டனர்.

அரசாங்க ஆயுர்வேதக் கல்லூரி மாணவர் ஷியாம் சந்த்வானி இந்த மீட்புப் பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்டார். தீப்பற்றத் துவங்கிய பல பஸ்களை அவரே ஓட்டி, பாதுகாப்பான இடத்துக்கு எடுத்துச் சென்றார். பணிமனையில் இருந்த வேறு பல பஸ் பாகங்களையும் மீட்பதில் அஞ்சாமல் உதவினார். இந்தத் துணிச்சலான செயலின்போது அவரது உடைகளில் தீப்பற்றிக் கொண்டது; தீக்காயங்களால் பாதிக்கப்பட்டு உணர்விழந்தார். சந்த்வானி மருத்துவமனையில் ஒரு வாரம் தங்கி சிகிச்சை பெற்றார்.

சந்த்வானியின் வீரச் செயலைப் பாராட்டி மத்தியப் பிரதேச மாநில பஸ் போக்குவரத்துக் கார்ப்பொரேஷன் அவருக்கு 400 ரூபாய் பரிசு வழங்கியது. சந்த்வானி பெருந்தன்மையோடு அந்தப் பணத்தைப் பிரதம மந்திரியின் உதவி நிதிக்கு வழங்கிவிட்டார். பொதுச் சொத்துக்களை தீ விபத்தினின்று காப்பாற்ற துணிச்சலுடன் செயல்புரிந்த வீர இளைஞர் ஷியாம் சந்த்வானியை பிரதம மந்திரி இந்திரா பெரிதும் பாராட்டியிருக்கிறார்.

# இணைப்பை காமராஜர் ஆதரிக்கவில்லை: பழைய காங்கிரஸ் தலைவர் தகவல்

**சென்னை, ஜூலை 12—"இரு காங்கிரஸ் கட்சிகளின் இணைப்பை காமராஜர் ஆதரிக்கவில்லை" என்று காமராஜருடன் 5 தடவை பேச்சு நடத்திய மேற்கு வங்க பழைய காங்கிரஸ் தலைவர் பி. சி. சென் கூறினார்.**

ஸ்தல மட்டத்தில் புது காங்கிரசுடனும், ஒத்த கருத்து கொண்ட இதர கட்சிகளுடனும் சேர்ந்த உடன்பாடுகளைச் செய்துகொள்வதையே தமிழ் நாடு பழைய காங்கிரஸ் விரும்புகிறது என்றும் பி. சி. சென் கூறினார்.

காமராஜருக்கும் பழைய காங்கிரஸ் மேலிடத்துக்கும் உள்ள கருத்து வேற்றுமைகளை அகற்றுவதற்காக கட்சி மேலிட சார்பில் பி. சி. சென், காமராஜருடன் கடந்த சில நாட்களாகப் பேச்சு நடத்தினார். மேற்கு வங்க பழைய காங்கிரஸ் செயலாளர் ஏ. கே. தத்தும் இப்பேச்சுவார்த்தைகளில் பங்கு கொண்டார்.

"புது காங்கிரஸ் கட்சியுடன் இணைவது பற்றி காமராஜருக்கு எண்ணம் கிடையாது என்று பேச்சுவார்த்தை முடிவில் இரு தலைவர்களும் கூறினர்.

அவர்கள் மேலும் கூறியதாவது:—

அரசியல் நிலைமைகள் மாநிலத்துக்கு மாநிலம் வித்தியாசப்படுகின்றன. ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள கட்சிக் கிளைகள் கட்சி அமைப்பை வலுப்படுத்தப் பாடுபடவேண்டும் என்ற அதே நேரத்தில் தேர்தலில் வெற்றி பெற ஒத்த கருத்து கொண்ட கட்சிகளுடன் தேர்தல் உடன்பாடு செய்து கொள்ள அவசியம் உள்ளது.

## தி. மு. க.— அ. தி. மு. க.

தமிழ்நாட்டில் அபூர்வ நிலைமை உள்ளது. இங்கு பிராந்தியக் கட்சி ஒன்று ஆட்சியில் உள்ளது. புது காங்கிரசுடன் பழைய காங்கிரஸ் உடன்பாடு செய்து கொண்டால் தி. மு. கழகத்தையும், அதே நேரத்தில் அ. தி. மு. க.வையும் தோற்கடிக்க முடியும் என்று காமராஜ் நம்புகிறார்.

தமிழ்நாட்டில் புது காங்கிரஸ் கட்சியும் எதிர்க் கட்சியாக உள்ளது. எனவே அக்கட்சியுடன் தேர்தல் கூட்டு சேர்ந்தால் தமிழ் நாட்டில் மக்களின் மனப்போக்கில் மாறுதல் ஏற்பட்டு, பெரிதும் பழைய காங்கிரசைக் கொண்ட ஆட்சி ஏற்படும் என்று காமராஜ் நம்புகிறார் என்று இரு தலைவர்களும் கூறினர்.

ஒரு கேள்விக்கு சென் பதிலளிக்கையில் அகில இந்திய ரீதியில் இரு காங்கிரஸ் இணைப்பு பற்றி நாங்கள் பேச்சு நடத்தவில்லை என்றும் காமராஜரும் அவ்விதத் திட்டத்தைக் கூறவில்லை என்றும் கூறினார்.

"காமராஜர் அவ்விதத் திட்டம் ஒன்றைக் கூறினால் கட்சி மேலிடம் அதைப் பரிசீலிக்கும்" என்றார் சென்.

# சோப்பு உற்பத்தியை உயர்த்த அரசு திட்டம்

புதுடெல்லி, ஜூலை 12—நாட்டில் சோப்பு உற்பத்தியை கணிசமான அளவில் உயர்த்துவதென மத்திய அரசு முடிவு செய்துள்ளது.

மத்திய அரசாங்க பெட்ரோலிய ரசாயன மந்திரி டி. கே. பரூவா இத் தகவலைத் தெரிவித்தார்.

பெட்ரோலிய ரசாயன அமைச்சகத்துக்கான ஆலோசனைக் கமிட்டி கூட்டத்தில் பேசுகையில் பரூவா இவ்வாறு சொன்னார்.

எண்ணெய்களைப் பயன்படுத்தி சோப்பு செய்வதைவிட ரசாயனப் பொருட்களைப் பயன்படுத்தும் சோப்புகளின் உற்பத்தியைப் பெருக்க அரசு ஆவன செய்யும் என்றார் மத்திய மந்திரி பரூவா.

மேற்கு வங்கம், பீகார், ஒரிசா, தமிழ்நாடு. கர்நாடகா உட்பட பல மாநிலங்களில் இவ்வித சோப்புகளின் உற்பத்தியைப் பெருக்க அனுமதித்துள்ளது என்று அவர் கூறினார்.

சோப்புகளின் விலை உயர்ந்துள்ளது பற்றி கமிட்டியின் மெம்பர்கள் எடுத்துக் கூறினர்.

# பெங்களூரில் இந்திரா

பெங்களூர், ஜூலை 12—பிரதமர் இந்திரா காந்தி விமான மூலம் நேற்று காலை பெங்களூர் வந்துசேர்ந்தார்.

விமான நிலையத்தில் அவரை முதல்வர் தேவராஜ் அர்ஸ், கவர்னர் சுகாதியா ஆகியோர் வரவேற்றனர்.

விமான நிலையத்திலிருந்து இந்திரா நேரே பெங்களூர் பல்கலைக் கழகத்துக்குச் சென்று அங்கு சமூக பொருளாதார மாறுதலுக்கான தேசியக்கழகத்துக்கு அடிக்கல் நாட்டினார்.

# பெரியாருக்குச் சிலை; அ. தி. மு. க. ஏற்பாடு: எம். ஜி. ஆர். அறிவிப்பு

**சென்னை, ஜூலை 12—பெரியாருக்குச் சிலை வைக்க அ.தி.மு க. ஏற்பாடு செய்துவருகிறது செப்டம்பர் 17-ம் தேதி ஜெமினி மேம்பாலம் அருகே சிலை வைக்கப்படும் என்று எம். ஜி. ஆர். அறிவித்துள்ளார்**

இது குறித்து எம். ஜி. ஆர். வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

இந்த ஆண்டு செப்டம்பர் 17ந் தேதியன்று தந்தை பெரியார் பிறந்த நாளில் (ஜெமினி அருகில் உள்ள) அண்ணா மேம்பாலத்தில் அமைத்துள்ள விசேட மேடையில் பெரியாரின் சிலையை நிறுவி திறப்பு விழா நடத்த அண்ணா திமுக. முடிவு எடுத்திருக்கிறது.

இதன் தொடர்பாக உரிய அனுமதி கோரி தமிழக முதல்வருக்கும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் எழுதவும், தொடர்பு கொள்ளவும் ஏற்பாடுகள் மேற்கொள்ளப்படும்.

பெரியார் சிலை திறப்பு விழாவினை சென்னை நகரமே கண்டிராத மாபெரும் விழாவாகக் கொண்டாட தமிழகத்தின் தலைநகரம் காத்திருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம் என்று எம்.ஜி.ஆர். தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

# சென்னையில் இலங்கை மந்திரி

சென்னை, ஜூலை 12—இலங்கை தகவல் ஒலிபரப்பு அமைச்சர் ஆர் எஸ். பெரேரா, நேற்று பெங்களூரிலிருந்து சென்னை வந்துசேர்ந்தார். மத்திய தகவல் ஒலிபரப்பு துணை அமைச்சர் தரம்வீர் சின்ஹாவும், மாநில அரசாங்க அதிகாரிகளும் விமான நிலையத்தில் அவரை வரவேற்றனர்.

பெரேரா நேற்று மாலை சென்னையில் உள்ள திரைப்பட ஸ்டூடியோ ஒன்றை சுற்றிப் பார்த்தார். அவரை கௌரவிக்கும் வகையில் தமிழக ஆளுநர் கே. கே. ஷா நேற்று இரவு விருந்து நடத்தினார்.

அவர் நாளை வெள்ளிக்கிழமையன்று காலையில் கொழும்புவக்கப் புறப்படுவார்.

### எம். ஆர். ராதா துவக்கி வைக்கிறார்

# தாசிகுலப் பேச்சை கண்டித்து சென்னையில் கழுதை ஊர்வலம்

சென்னை ஜூலை 12— எம். ஜி. ஆரின் தாசிகுலப் பேச்சைக் கண்டித்து சென்னையில் கழுதை ஊர்வலம் நடைபெற இருக்கிறது

இது குறித்து சக்திசேனை தலைவர் மு. க. மணிமொழியனும் செயலாளர் மு. க. கதிரவத்தேவரும் தெரிவித்துள்ளதாவது:

எம். ஜி. ராமச்சந்திரனின் தாசிகுலப் பேச்சைக் கண்டிக்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கழுதை ஊர்வலம் கடந்த 7-ந் தேதி நடைபெறுவதாக இருந்தது. அது ஜூலை 14-ந் தேதிக்கு தள்ளி வைக்கப்பட்டது.

14-7-74 காலை 10 மணிக்கு அண்ணாசாலையில் உள்ள காமராசர் சிலை அருகிலிருந்து கழுதை ஊர்வலம் புறப்படும். ஊர்வலத்தை எம். ஆர். ராதா துவக்கி வைப்பார். நாத்திகம் ராமசாமி. சக்தி மு. கதிர்வேல் நாஞ்சில்துரை, என். யூ. தவே ஆகியோர் முன்னிலையிலும், பி.எம். ராசவேலன் தலைமையிலும் ஊர்வலம் நடைபெறும்.

ஊர்வலம் திருவல்லிக்கேணி கடற்கரையில் உள்ள கற்புக்கரசி கண்ணகி சிலையை அடைந்ததும் அங்கு வீர சபதம் ஏற்கும்.

தன்மானமுள்ள தமிழர்கள் திரண்டுவந்து தமிழ்த் தாய்க் குலத்தை ஏசிய தறுக்கருக்குப் பாடம் கற்பிக்க வேண்டுகிறோம். இவ்வாறு அவர்கள் தங்கள் அறிக்கையில் கூறியுள்ளனர்.

# சோப்புகட்டியில் கலப்படம்

புதுடெல்லி, ஜூலை 12—சோப்புக் கட்டிகளிலும் இப்போது கலப்படம் செய்யப்படுகிறது.

கலப்படம் செய்யப்பட்ட வாசனை சோப்புக் கட்டிகளை ஏமாந்து வாங்கி உபயோகிப்பவர்களுக்கு தோல் வியாதிகள் ஏற்படுவதாகத் தெரிய வந்துள்ளது.

அகில இந்திய பொருள் உபயோகிப்போர் சங்கம் கடந்த 3 மாதகாலமாக நடத்திய சர்வேயிலிருந்து தெரியவந்துள்ளது.

சென்னை, கல்கத்தா, பம்பாய், டெல்லி ஆகிய நகரங்களில் சலவை சோப்பு தயாரிப்பாளர்கள் தங்களுடைய சலவைசோப்பில் வர்ணத்தையும், வாசனையையும் கலந்து 'வாசனை சோப்பு' என்னும் பெயரில் விற்பனை செய்கின்றனர். மக்கள் விரும்பி வாங்கும் சிலவகை வாசனை சோப்புகளைப் போலவே இந்த போலி வாசனை சோப்புகள் தயாரித்து விற்கப்படுகின்றன.

போலி வாசனை சோப்புகளை ஏமாந்து வாங்கிப் பயன்படுத்தியதன் விளைவாக இந்த நான்கு நகரங்களிலும், கிராமப் புறங்களிலும் பெண்கள் குழந்தைகள் உட்பட சுமார் 2500 பேருக்கு தோலில் அரிப்பும், மற்றும் தோல் வியாதிகளும் ஏற்பட்டுள்ளதாக மேற்படி சர்வேயில் தெரியவந்துள்ளது.

சலவை சோப்பு தயாரிப்பாளர்கள் போலி வாசனை சோப்பு தயாரிப்பதால் அரசாங்கத்துக்கு வரி நஷ்டம் ஏற்படுகிறது. வாசனை சோப்பு தயாரித்தால் மத்திய அரசுக்கு 33 சதவிகித எக்சைஸ் வரியும் மாநில அரசுக்கு 8 சத விகித விற்பனை வரியும் செலுத்தியாகவேண்டும். ஆனால் போலி வாசனை தயாரிப்பாளர்கள் இந்த வரிகளை செலுத்துவதில்லை.

'எங்கம்மா சபதம்' என்றால் எல்லோரும் இப்படி வாயைப் பிளக்கவேண்டுமா? ஜெயசித்ரா, விதுபாலா, எம். என். ராஜம்.

# நடிகர் ஜெய்சங்கர் எந்த கட்சியிலும் சேரக்கூடாது: மந்திரி ராசாராம் விருப்பம்

'நடிகர் ஜெய்சங்கர் எந்தக் கட்சியிலும் சேரக் கூடாது' என்று தமிழக அமைச்சர் ராசாராம், கூறினார்.

ஜெய்சங்கர் கதாநாயகனாக நடித்த "உங்கள் விருப்பம்" பட வெளியீட்டு விழாவையும் டைரக்டர் கே. கிருஷ்ண மூர்த்திக்கு "இயக்குநர் தென்றல்" பட்டமளிப்பு விழாவையும் அகில இந்தியாவிலுள்ள 1380 ஜெய்சங்கர் ரசிகர் மன்றங்களின் சார்பில் "அனைத்து இந்திய ஜெய்சங்கர் ரசிகர்கள் த[illegible] மன்றத்தினர்" கடந்த வெள்ளியன்று சென்னை பாரகன் தியேட்டரில் கொண்டாடினர்.

எம். நாகேஸ்வரன் தலைமையில் கொண்டாடப்பட்ட இவ்விழாவில் அமைச்சர் க. ராசாராம் கலந்துகொண்டு டைரக்டர் கே. கிருஷ்ணமூர்த்திக்கு "இயக்குநர் தென்றல்" என்ற பட்டத்தை அளித்து பாராட்டிப் பேசினார். பேசும் போது அமைச்சர் ராசாராம் கூறியதாவது:

இன்று நம்முடைய சென்னை நகரத்திலே உள்ள 64 தியேட்டர்களில் 34 தியேட்டர்களில் மாற்று மொழிப் படங்கள் திரையிடப்பட்டு வருகின்றன. சென்னையில் மட்டும் தான் இந்த நிலை உள்ளதே தவிர பம்பாயையோ, டெல்லியையோ, கல்கத்தாவையோ, கர்நாடகத் தலைநகரமான பெங்களூரையோ நாம் பார்ப்போமானால் அங்கே அவர்களுடைய மொழிப் படங்கள் மட்டுமே பெருவாரியான தியேட்டர்களில் ஆதிக்கம் செலுத்துவதைக் காணலாம்.

தமிழ் மக்களாகிய நீங்கள் ஜெய்ச[illegible] கதாநாயகனாக நடித்துள்ள இந்த "உங்கள் விருப்பம்" படத்தைப்பார்த்து அதிலுள்ள நகைச் சுவையை ரசிப்பீர்களேயானால் இது போன்று உங்கள் விருப்பத்தை அறிந்து, அதாவது நீங்கள் என்ன விரும்புகிறீர்கள் என்பதை அறிந்து பல பட அதிபர்கள் அதற்கேற்ப படங்களை உருவாக்குவார்கள். அப்படி பெருமளவில் நல்ல படங்கள் தயாரிக்கப்பட்டு நல்ல வரவேற்பைப் பெருமானால் மற்ற மொழிப் படங்கள் ஆதிக்கம் இங்கே குறையும்.

'கல்யாணமாம் கல்யாணம்' படத்தின் மூலம் நம்மை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்திய டைரக்டர் கே. கிருஷ்ணமூர்த்தி இப்படத்தில் ஜேம்ஸ் பாண்ட் நடிகரான ஜெய்சங்கரை நகைச்சுவை பாத்திரத்தில் தன் இயக்கும் திறமையால் மிக அருமையாக நடிக்கவைத்துள்ளார்.

ஜெய்சங்கர் எந்தக் கட்சியிலும் சேராதவர். தமிழக ரசிகர் உள்ளங்களில் இடம் பிடித்துள்ள அவர் எந்தக் கட்சியிலும் சேராமல் இப்படியே இருக்க வாழ்த்துகிறேன் என்று கூறினார்.

விழாவில் கே. ஏ. தங்கவேலு, தேங்காய் சீனிவாசன் ஆகியோர் பேசினார்கள். படத்தில் பங்குபெற்ற ஜெயசித்ரா, தேங்காய் சீனிவாசன் ஆகியோருக்கு பாராட்டு கேடயங்கள் வழங்கப்பட்டன.

வி. கே. ராமசாமி, வி. கோபாலகிருஷ்ணன், ஏ. சகுந்தலா, கதாசிரியர் பஞ்சு அருணாசலம், இசையமைப்பாளர் விஜயபாஸ்கர், பின்னணிப் பாடகி வாணி ஜெயராம் நந்தகோபால் செட்டியார் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டனர்.

பாராட்டுரைகளுக்கு நன்றி தெரிவித்து டைரக்டர் கே. கிருஷ்ணமூர்த்தி பேசினார். ரசிகர் மன்றச் செயலாளர் மா. விஜயன் நன்றி கூறினார்.

# தமிழ்ப் படத்திற்கு பிற மொழிக் கதைகளை தேடிச் செல்வதேன்?

## ரவீந்தர் பேட்டி

திரைப்படத்திற்குப் பிற மொழிக் கதைகளை தமிழ்ப் படத் தயாரிப்பாளர்கள் தேடிச் செல்வதேன் என்பதற்கு பிரபல வசனகர்த்தா ரவீந்தர் பதில் கூறினார்.

பாக்தாத் [illegible]ரழகி, சங்கமம் ஆகிய ப[illegible]களுக்கு கதை வசனம் எழுதியவர் ரவீந்தர்.

காரைக்காலுக்கு வந்திருந்த ரவீந்தர் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:—

"1950-ம் ஆண்டு திரைப்பட உலகில் புகுந்தேன். இது வரையில் 27 படங்களுக்கு கதை வசனம் எழுதி இருக்கின்றேன்.

### நடிகருக்கேற்ப கதை

சினிமாவுக்கு கதை எழுதும் போது நடிகர் நடிகைகளை மனதில் வைத்து எழுதினால் தான் சிறப்பாக அமையும். காரணம் ஒவ்வொரு நடிகருக்கு இப்படிப்பட்ட வேடம் தான் இருக்கவேண்டும் என்று மக்கள் மனதில் முடிவெடுத்து வைத்து இருக்கிறார்கள். எனவே, யார் யாருக்கு என்னென்ன வேடம் என்று மனதில் வைத்து எழுதினால்தான் சிறப்பாக அமையும்.

பிறமொழிகள் கலப்பு இல்லாமல் தனித்தமிழில் கதை எழுத முடியும். இதற்கு ஒரு எடுத்துக் காட்டு "மருத நாட்டு வீரன்" படமாகும். இதற்கு தமிழ்ப்புலவர்கள் நல்ல பாராட்டு கொடுத்தார்கள்.

திரைப்படக் கதைகளை இப்பொழுது மக்கள் கவனித்து தேர்ந்தெடுக்கிறார்கள். எதை, சொல்கிறோம் எப்படிச் சொல்கிறோம் என்பதை மக்கள் எதிர்பார்க்கிறார்கள். எனவே கதையாசிரியர்கள் விழிப்புடன் இருக்க வேண்டிய காலம் இது.

தமிழ்நாட்டில் திரைப்படத்திற்கேற்ற நல்ல கதைகள் நிறைய உண்டு. கற்பனை வளம் மிக்க எழுத்தாளர்களும் இருக்கிறார்கள். ஆனால், பிறமொழி கதைகளை எடுப்பது சுலபமாக இருப்பதால் கஷ்டப்படாமல் கதை எழுதி வெற்றி பெறவேண்டும் என்கிற மன நிலை இன்று உருவாகி விட்டது.

இப்பொழுது நான் 'ஸ்டேஷன் மாஸ்டர்', ஆதாமும் ஏவாளும், நாச்சியார் கோவில் (மலையாளம்) ஆகிய படங்களுக்கு கதை வசனம் எழுதிவருகின்றேன். இப்படங்கள் விரைவில் வெளிவர இருக்கின்றன. இவ்வாறு கதை வசனகர்த்தா ரவீந்தர் நிருபர்களிடம் கூறினார்.

# பறக்கும் பூனை நடிக்கும் புதிய படம்

பெங்களூரில் புதிதாக ஆரம்பித்து இருக்கும் சுந்தரி பிக்சர்சார் தயாரிக்கும் சினிமாவில் 'பறக்கும் பூனை' ஒன்று நடிக்கப்போகிறது.

இரண்டு இறக்கைகளை உடைய இந்த அதிசய பறக்கும் பூனை பல அற்புதமான செயல்களை செய்கிறது.

படத்தின் பெயர் 'சர்க்கரை பந்தல்'. கதை வசனத்தை சின்ன அண்ணாமலை எழுதி இருக்கிறார்.

கருநாடகத்தில் தயாராகும் இந்தப்படம் முழுக்க முழுக்க வெளிப்புறக் காட்சிகளையே கொண்டதாகும்.

படத்தில் பிரபல நடிகர்கள் முத்துராமன், மனோகர் தேங்காய் சீனிவாசன், உஷாநந்தினி ஆகியோர் நடிக்கிறார்கள். கருங்குரங்கு, சிங்கம் ஆகியவைகளும் நடிக்கின்றன.

## இன்றைய சினிமா

**சென்னை**

| | |
|---|---|
| ராம் | ரோஷக்காரி |
| நியூ எல்பின்ஸ்டன் | சட்டைக்காரி |
| நேஷனல் | தெய்வப் பிறவி |
| சாரஸ் | கடவுள் மாமா |

**தாம்பரம்**

| | |
|---|---|
| நேஷனல் | சுவாதி நட்சத்திரம் |
| எம்.ஆர். தியேட்டர் | |
| ஸ்ரீநிவாஸ் | நான் அவனில்லை |
| | தீர்க்க சுமங்கலி |

**வில்லிவாக்கம்**

| | |
|---|---|
| ராயல் | வெள்ளிக்கிழமை விரதம் |

**குரோம்பேட்டை**

| | |
|---|---|
| வெற்றி | நேற்று-இன்று-நாளை |

# திரை உலகம்

'புனித அந்தோனியார்' படத்தில் லட்சுமி

# சிவாஜிகணேசன், மஞ்சுளா ரகசிய சந்திப்பு

சிவாஜி கணேசனும், மஞ்சுளாவும் ஒருவரையொருவர் சந்திக்க முடியாதபடி இருவரையும் பிரித்து வைத்தார் சிவாஜியின் தந்தை. பிரபல வக்கீலான அவர் தன் மகனையும் சட்டப்படிப்புக்கு படிக்க வைத்திருந்தார். தன்மகனின் படிப்பு எந்த வகையிலும் கெடக்கூடாது என்பதற்காக அவர் இவ்வாறு செய்தார். கோர்ட்டுக்குப் போகும் போது மகனும் மருமகளும் சந்திக்காமல் இருக்க குமாஸ்தாவை காவல் போட்டு வைத்தார். திருமணமான இளம் ஜோடிகள் ஒன்றை ஒன்று சந்திக்கவும், பேசவும் தவியாய்த் தவித்தனர்.

நந்திபோல் இருவரையும் கண்ணிமைக்காமல் குமாஸ்தா பார்த்துக் கொண்டிருக்கிறார்.

சமையக்காரனுக்கு அந்த இளம் சிட்டுகளை எப்படியாவது சந்திக்கவைக்கவேண்டும் என்று ஆசை. சிவாஜிக்கு சமையற்காரன் ரொம்பவும் வேண்டியவனாகையால் எப்படியாவது சந்திக்கவைத்தே தீருவது என்று திட்டம் தீட்டிக்கொண்டிருந்தான்.

தம்பதிகளிருவரும் தனித் தனியே தாபத்தால் தவியாய் தவித்துக் கொண்டிருந்தனர்.

இந்த நேரத்தில் சமையல் காரன் மிளகாய் தூள், சீயக்காய் தூள் ஆகியவைகளைத் தூக்கிக்கொண்டு வெளியில் வருகிறான். குமாஸ்தா கொட்டக் கொட்ட விழித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பது அவனுக்கு கோபத்தை உண்டாக்குகிறது. மாடியில் தாபத்தோடு உள்ள தம்பதிகளின் வேதனை அவனது ஆத்திரத்தை இன்னும் அதிகம[illegible]க்குகிறது. வேண்டுமென்[illegible] குமாஸ்தாவின் மீது மோதி மிளகாய்ப் பொடியையும் சீயக்காய் பொடியையும் [illegible]வர் மேலே கொட்டுகிறான். குமாஸ்தா நெடி தாங்காமல் கண்களைக் கசக்கியபடி அங்குமிங்கும் ஓடுகிறார்.

"ம்.,. ஆகட்டும்" என்று கையை அசைத்து சைகை காட்டினான் சமையற்காரன்.

இளந்தம்பதிகள் இருவரும் ஆவலோடு ஓடிச் சென்று ஒருவரையொருவர் அணைத்துக்கொள்கின்றனர்.

இக்காட்சி அமுதம் பிக்[illegible]சாரின் "அன்பே ஆருயிரே" வண்ணப் படத்திற்காக வாகினியில் படமாக்கப்பட்டது. சிவாஜியின் தந்தையாக மேஜர் சுந்தரராஜனும் சமையற்காரனாக சுருளிராஜனும் குமாஸ்தாவாக ராமாராவும் நடித்தனர்.

மற்றும் நாகேஷ், வி கே. ராமசாமியும் நடிக்கின்றனர்.

ஏ. எல். நாராய[illegible]ன் வசனம் எழுதுகிறார்.

திரைக்கதை, டைரக்ஷனை ஏ. சி. திரிலோகசந்தர் கவனிக்கிறார்.

'அக்கரைப் பச்சை' படத்தில் ரவிச்சந்திரன், ராஜஸ்ரீ

# அவன் ஒரு சரித்திரம்

கோமதி சங்கர் பிக்சர்சாரின் 'அவன் ஒரு சரித்திரம்' படத் துவக்க விழா வாகினி ஸ்டுடியோவில் நடைபெற்றது.

சிவாஜி கணேசனின் பேத்தி விஜயலக்ஷ்மி கேமராவை முடுக்கி படப்பிடிப்பை துவங்கினது.

படத்தில் சிவாஜி கணேசன் டி.கே. பகவதி, வி. கே. ராமசாமி, மேஜர் சுந்தர்ராஜன், சசிகுமார், சோ, மஞ்சுளா, காஞ்சனா, பண்டரிபாய், மனோரமா, எம். பானுமதி ஆகியோர் நடிக்கின்றனர்.

செல்வபாரதியின் கதைக்கு ஆரூர் தாஸ் வசனம் எழுதுகிறார். கண்ணதாசன் பாடலுக்கு விஸ்வநாதன் இசையமைக்கிறார்.

கே. எஸ். பிரகாஷ்ராவ் டைரக்ட் செய்ய ஏ. வின்சென்ட் ஒளிப்பதிவு செய்கிறார்.

குற்றாலிங்கம் தயாரிக்கிறார்.

துவக்க விழாவிற்கு வந்தவர்களை ஆறுமுகம், தயாரிப்பாளர் குற்றாலிங்கம், ஜேவி ஆகியோர் வரவேற்றனர்.



# தமிழ்நாடு அரசு அறுபத்து ஏழாவது பரிசுச் சீட்டு குலுக்கல் முடிவுகள்

குலுக்கல் தேதி. 11—7—1974 குலுக்கல் நடைபெற்ற இடம்: ராஜாஜி ஹால்

## LI வரிசை

பரிசு பெற்ற எண்கள்

ஒரு முதல் பரிசு, பரிசு தொகை ரூ. 1 லட்சம்

715574

இந்த எண்ணுக்கு முன்னும் பின்னும் உள்ள இரண்டு பரிசுச் சீட்டுகளுக்கும் தலா ரூ. 1500 ஆறுதல் பரிசு அளிக்கப்படும்.

715573 715575

இரண்டு இரண்டாவது பரிசுகள்
பரிசு தொகை ரூ. பத்தாயிரம்

133366 756634

இந்த இரண்டு பரிசுச் சீட்டுகளின் முன்னும் பின்னும் உள்ள நான்கு பரிசுச் சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசாக தலா ரூ. ஐந்நூறு வழங்கப்படும்.

133365 133367
756633 756635

இருபத்தைந்து மூன்றாவது பரிசுகள்
தலா ரூ. ஆயிரம்

| | | |
|---|---|---|
| 012176 | 050390 | 166132 |
| 209183 | 324547 | 334494 |
| 400672 | 406986 | 421384 |
| 487739 | 532935 | 533449 |
| 536847 | 544584 | 565080 |
| 570772 | 612121 | 646003 |
| 651575 | 727501 | 769333 |
| 815536 | 900736 | 903651 |
| 928809 | | |

நூறு நான்காவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐந்நூறு
000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது ஐந்து எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசு வழங்கப்படும்.

| | | |
|---|---|---|
| 02509 | 14750 | 25821 |
| 30212 | 31143 | 45272 |
| 57962 | 66546 | 67654 |
| 96044 | | |

ஐந்நூறு ஐந்தாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. நூறு
000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது நான்கு எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசுவழங்கப்படும்.

3041 3121 5126 8611
9038

இரண்டு ஆயிரம் ஆறாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐம்பது
000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசு சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது மூன்று எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசுவழங்கப்படும்.

355 412

## LJ வரிசை

பரிசு பெற்ற எண்கள்

ஒரு முதல் பரிசு, பரிசு தொகை ரூ. 1 லட்சம்

547550

இந்த எண்ணுக்கு முன்னும் பின்னும் உள்ள இரண்டு பரிசுச் சீட்டுகளுக்கும் தலா ரூ. 1,500 ஆறுதல் பரிசு அளிக்கப்படும்.

547549 547551

இரண்டு இரண்டாவது பரிசுகள்
பரிசு தொகை ரூ. பத்தாயிரம்

283823 306108

இந்த இரண்டு பரிசுச் சீட்டுகளின் முன்னும் பின்னும் உள்ள நான்கு பரிசுச் சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசாக தலா ரூ. ஐந்நூறு வழங்கப்படும்,

283822 283824
30[illegible] 306109

இருபத்தைந்து மூன்றாவது பரிசுகள்
தலா ரூ. ஆயிரம்

| | | |
|---|---|---|
| 026473 | 049122 | 058182 |
| 135119 | 179940 | 198888 |
| 310876 | 411022 | 414943 |
| 416948 | 417123 | 423057 |
| 439670 | 493994 | 502496 |
| 567725 | 616184 | 715264 |
| 746606 | 748094 | 820685 |
| 861757 | 863500 | 913801 |
| 927715 | | |

நூறு நான்காவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐந்நூறு
000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச்சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது ஐந்து எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுக்களுக்குபரிசுவழங்கப்படும்.

| | | |
|---|---|---|
| 23321 | 27815 | 36228 |
| 38481 | 39020 | 44259 |
| 51581 | 58682 | 79654 |
| 96847 | | |

ஐந்நூறு ஐந்தாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. நூறு
000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது நான்கு எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுக்களுக்குபரிசுவழங்கப்படும்.

3834 6308 9012 9014
9912

இண்டு ஆயிரம் ஆறாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐம்பது
000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது மூன்று எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசு வழங்கப்படும்.

188 363

முதல் பரிசு, இரண்டாம் பரிசு பெற்ற சீட்டுக்களை வைத்திருப்பவர்கள் பரிசுத் தொகையைப் பெற சென்னை அரசினர் தோட்டத்தில் உள்ள சிறு சேமிப்பு மற்றும் பரிசுச் சீட்டுத் திட்ட இயக்குநர் அலுவலகத்திலும், மூன்றாவது பரிசு முதல், ஆறாவது பரிசு வரை மற்றும் ஆறுதல் பரிசு பெற்ற சீட்டுக்களை வைத்திருப்பவர்கள் பரிசுத் தொகையைப் பெற தமிழகத்தில் உள்ள எந்த ஒரு துணைக் கருவூலத்திலும் அதற்குரிய படிவங்களை நிரப்பிக் கொடுத்து குலுக்கல் நடந்த 28 நாட்களுக்குள் பரிசுகளை பெறலாம். எழுதித் தீரவேண்டிய படிவங்கள், பரிசுகள் பெறவேண்டிய அலுவலகங்களில் கிடைக்கும். விண்ணப்பங்கள் நேரிலோ அல்லது ரிசர்வ் பாங்கு அட்டவணையில் உள்ள வங்கிகள் மூலமாகவோ கொடுக்கலாம். நான்கு வாரங்கள் கழித்துவிட்டால் இயக்குநருக்கு விண்ணப்பிக்கவேண்டும். பரிசு பெற்ற எண்கள் அடங்கிய விவரப் பட்டியல் தமிழக சிறப்பு அரசிதழாக வெளியிடப்படுகின்றது. மேற்படி பட்டியல்வேண்டுவோர் அதற்குரிய கட்டணத்தை செலுத்தி விற்பனை அதிகாரி, அரசு வெளியீட்டு நிலையம், 166, அண்ணாசாலை, சென்னை—600002 என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம். பரிசுச் சீட்டு விவரங்கள் பற்றி இயக்குநர், சிறு சேமிப்பு மற்றும் பரிசுச் சீட்டுத் திட்டம், அரசினர் தோட்டம், சென்னை-600002 என்ற முகவரிக்கு எழுத வேண்டும்.

விண்ணப்பங்களை பெற்றுக் கொள்ள கடைசி தேதி: 7—8—1974.

## 68-வது சிறப்பு பரிசுச் சீட்டு குலுக்கல்

68-வது சிறப்பு பரிசுச்சீட்டு குலுக்கல் 1974 செப்டம்பர் 28-ம் தேதி நடைபெறும்.

**மொத்த பரிசுகள்: 12,312**

**மொத்தப் பரிசுத் தொகை: 35,00,000**

அடுத்த குலுக்கல்: 28—9—1974

அடுத்த குலுக்கலுக்கு வரிசைகள்: 10 (பத்து) எல்.கே., எல்.எல்., எல்.எம்., எல்.என்., [illegible].ஒ., எல்.பி., எல்.க்யூ., எல்.ஆர்., எல்.எஸ்., எல்.டி.,

பரிசுகள் விபரம் வருமாறு:
சிறப்பு பரிசுகள் எல்லா வரிசைக்கும் பொதுவானது

| பரிசுகளின் விவரம் | பரிசுத் தொகை ரூ. | மொத்த பரிசுகள் | மொத்த பரிசுத் தொகை ரூ. |
|---|---|---|---|
| I | 10,00,000 | 1 | 10,00,000 |
| II | 2,00,000 | 1 | 2,00,000 |
| | | 2 | 12,00,000 |
| ஒவ்வொரு வரிசைக்கும் வழக்கமான பரிசுகள். | | | |
| I | 1,00,000 | 1 | 1,00,000 |
| II | 10,000 | 2 | 20,000 |
| III | 5,000 | 3 | 15,000 |
| IV | 1,000 | 25 | 25,000 |
| V | 100 | 200 | 20,000 |
| VI | 50 | 1000 | 50,000 |
| | | 1231 | 2,30,000 |
| சிறப்பு பரிசுகள் ... | | 2 | 12,00,000 |
| வழக்கமான சாதாரண பரிசுகள் ... | | 12310 | 23,00,000 |
| மொத்தம் ... | | 12312 | 35,00,000 |

இதுவரை 353 லட்சாதிபதிகளை தமிழக அரசு உருவாக்கியுள்ளது!

இந்த பரிசுச் சீட்டு திட்டத்தின் மூலம் கிடைக்கும் வருவாய், முதலமைச்சரின் உடல் ஊனமுற்றவர்கள் மறுவாழ்வு நிதிக்காக ஒதுக்கப்படுகிறது.

நாடு நலம் பெற, உங்கள் நல்வாய்ப்பினைச் சோதிக்க வாங்கிடுவீர் தமிழக பரிசுச் சீட்டு!

ஒரு சீட்டின் விலை ரூ. 1/- தான்.

ஏ. எம். நபி,
இயக்குநர்,
சிறு சேமிப்பு (பரிசுச் சீட்டுத் திட்டம்) சென்னை-600002

Printed by S.V.G. Sowrirajulu at the M.C.P.P.S. Press, No. 4, South Bank Road, Madras 600028 and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S.V.G. Sowrirajulu
Honorary Editor: N. Muthukumarasami